20th September 1961]

**Sri K. ANBAZHAGAN** : இந்த உதவி பெறும் பள்ளிக்கூடங்களுக்கு அளிக்கப்படுகிற உதவித் தொகையின் விவரங்கள் இங்கு இருக்கிறது. ஆனால் இந்தத் தொகைகள் எந்தெந்த சந்தர்ப்பங்களில் எந்தெந்த மாதங்களில் அளிக்கப்படுமென்பது வரையறுக்கப்பட்டிருக்கிறதா? அல்லது ஆறு அல்லது எட்டு மாதங்கள் கழித்து அளிக்கப்படுவதால் ஆசிரியர்கள் படும் தொல்லைகளும், இன்னல்களும் அமைச்சர் அவர்களுக்கு மனுக்கள் மூலம் வந்திருக்கிறதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அங்கத்தினர் அவர்கள் எந்தப் பள்ளிக்கூடத்தைப் பற்றிக் கேட்கிறார்கள் என்று தெரியவில்லை. இது, ஹைஸ்கூல்களைப் பொறுத்தவரையில் உள்ளது. ஹைஸ்கூல்களைப் பொறுத்த வரையில் இந்த வருஷம் ஆகிற செலவை, அடுத்து வருஷந் தான் எவ்வளவு செலவாகியிருக்கிறது என்று கணக்குப்போட்டு கொடுக்கப் படுகிறது. ஆகவே அங்கத்தினர் அவர்கள் கேட்கும் கேள்விக்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

*Pearl Fishery*

* 1650 *Q*.—Sri A. A. RASHEED : Will the **Hon.** the Minister for Local Administration be pleased to state—

(*a*) the total value of money realised by the sale of oysters in Tuticorin until the end of 30th April 1961; and

(*b*) whether there is any proposal to introduce modern methods of diving for oysters?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : (*a*) The gross revenue by the sale of oysters for the whole season (March to May) in 1961 is Rs. 2.89 lakhs. The revenue up to 30th April 1961 is Rs. 2·54 lakhs.

(*a*) Yes. A proposal to introduce modern methods of diving with Aqua Lung is under examination of the Director of Fisheries, Madras.

Sri A. A. RASHEED : Is it a fact that the divers are unable to gather more number of oysters because of the obsolete diving methods adopted?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : The same methods of diving that have been adopted for many years in the past are adopted now and there is no complaint about those methods.

Sri A. A. RASHEED : What is the share of the divers in the realisation of this money, Sir?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : Sir, the oysters are collected at the sea and when they are in the boat itself, they are divided. One-third is given to the divers and two-thirds are taken by the Government for the expenditure and as Government's share.

**Sri K. B. S. MANI** : இப்படிப்பட்ட அதிக லாபம் கொடுக்கக்கூடிய சிப்பிகள் வேறு எங்கேயாவது நமது கடற்கரையில் இருக்கிறதா என்று ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறதா ? அல்லது இவைகளை வளர்ப்பதற்கும் அபிவிருத்தி செய்வதற்கும் எதாவது வழிவகைகள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON** : பல சந்தர்ப்பங்களில் ஆராய்ச்சி செய்ததில் தூத்துக்குடியில்தான் இது அதிகமாகக் கிடைக்கிறது. வேறு சில இடங்களில் சிறிய அளவு சிப்பிகள் கிடைத்தாலும் அவை எடுக்கும் முறையில் இல்லாமலிருக்கிறது.